# திருப்புகழமிர்தம்





ஆசிரியர்

## கிருபானந்தவாரி

வயலி நகரியி லருள் பெற மயில் மிசை

சௌமிய யுதவு பரிமள மதுகர வெகுவித ஐப்பசி

வனச மலரடி கனவிலு நனவிலு மறவேனே.

உ

முருகா

# இலக்ஷார்ச்சனை

காங்கேய நல்லூர் ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமி தேவஸ்தானத்தில் 9-11-69 ஞாயிறு முதல் 14-11-69 வெள்ளி வரையில்

ஸ்கந்த ஷஷ்டி இலக்ஷார்ச்சனை

திருமுருக கிருபானந்தவாரி சுவாமிகள் அவர்கள் முன்னிலையில் மிகச் சிறப்பாக நடைபெறும்.

அர்ச்சனை ஒன்றுக்கு ரூ 10-00

விருப்பமுள்ள அன்பர்கள் நேரில் கலந்து கொண்டோ அல்லது பின்வரும் விலாசத்துக்குப் பணமனுப்பியோ அர்ச்சனையில் பங்கு கொள்ள வேண்டுகிறோம்.

நிர்வாக தர்மகர்த்தா.
ஸ்ரீ சுப்பிரமணியசுவாமி தேவஸ்தானம்
காங்கேயநல்லூர் P. O.
(வழி) காட்பாடி நகர் விரிவு
(Katpadi Extension N.A. Dt.)

மணியார்டர் மூலம் பெற்றுக் கொள்ளும் விலாசம்.
மானேஜர், திருப்புகழமிர்தம் ஆபீஸ்,
89, சிங்கண்ண செட்டித் தெரு,
சிந்தாதிரிப்பேட்டை, சென்னை-2.

---

உ

# புதிய வெளியீடுகள்

1. **கட்டுரைக் கனிகள்**

பல ஆண்டுகளாக நமது திருப்புகழமிர்தத்தில் வெளிவந்துள்ள முக்கியமான 67 கட்டுரைகளின் தொகுப்பு. மிகவும் குறைந்த விலையில் வெளியிடப்பட்டுள்ளது. 420 பக்கங்கள் விலை ரூ. 3—00. பதிவு தபாற் செலவு ரூ. 1—10.

2. **கற்புக் கனிகள்—முதற் புத்தகம்**

கற்பு என்னும் தலைப்பின்கீழ் வெளிவந்த சிறுகதைகள் 21 கொண்ட தொகுப்பு விலை ரூ. 1—00. தபாற் செலவு 0—20.

3. **கற்புக் கனிகள்—இரண்டாம் புத்தகம்**

கற்புக் கதைகள் 16 கொண்ட தொகுப்பு விலை ரூ. 1—00. தபாற் செலவு 0—20

4. **கற்புக்கனிகள்—மூன்றாவது புத்தகம் (11 சிறுகதைகள்)**

ரூபாய் 1—00. தபாற் செலவு 0—20.

ரிஜிஸ்டர் தபாற் கட்டணம் 0—75 வேறு.

உ

ஓம் குஹாய நம ।



# திருப்புகழமிர்தம்



"இருப்புகழை மேவுகின்ற கொற்றவன் ருள்போற்றும்
திருப்புகழைக் கேளீர் தினம்"

| | | |
|---|---|---|
| மலர் 34 | சௌமிய ஹூ—ஐப்பசி மீ<br>அக்டோபர் 1969 | இதழ் 7 |

## திருப்புகழ்

### திருவருணை

அருமா மதனைப் பிரியாத சரக்
 கயலார் நயனக் கொடியார்தம்
அழகார் புளகப் புழுகார் சயிலத்
 தணையா வலிகெட் டுடல்தாழ

இருமா நடைபுக் குரைபோ யுணர்வற்
 றிணையா வுளமுக் குயிர்சோர
எரிவாய் நரகிற் புகுதா தபடிக்
 கிருபா தமெனக் கருள்வாயே

ஒருமால் வரையைச் சிறுதூள் படவிட்
 டுரமோ டெறிபொற் கதிர்வேலா
உறைமா னடவிக் குறமா மகளுக்
 குருகா றிருபொற் புயவீரா

திருமால் கமலப் பிரமா விழியிற்
 றெரியா வரனுக் கரியோனே
செழுநீர் வயல் சுற்றருணு புரியிற்
 றிரு வீதியினிற் பெருமாளே.

1485—1

## பதவுரை

ஒருமால் வரையை=ஒப்பற்ற மாயைகள் செய்த கிரவுஞ்ச மலையை, சிறுதூள் படவிட்டு=சிறிய தூளாகும்படிச் செய்து, உர மோடு எறி=வலிமையுடன் செலுத்திய, பொன் கதிர் வேலா=அழ கிய ஒளி வீசுகின்ற வேலாயுதரே! மான் உறை அடவி=மான்கள் வாழ்கின்ற கானகத்தில், குறமா மகளுக்கு உருகா=குறமகளாம் வள்ளியம்மைபால் உருகிய, ஆறுஇருபுய வீரா=பன்னிரு புயங்களை யுடைய வீரமூர்த்தியே! திருமால்=நாராயணர், கமல பிரமா= தாமரையில் வாழும் பிரமதேவர் என்ற இருவருடைய, விழியில் தெரியா=கண்களுக்கும் காணப்பெறாத, அரனுக்கு அரியோனே= சிவமூர்த்திக்கும் அருமை வாய்ந்தவரே! செழுநீர் வயல் சுற்று= செழுமை வாய்ந்த நீர் நிரம்பிய கழனிகள் சூழ்ந்துள்ள, அருணபுரி யில்=திருவண்ணுமலை நகரில், திருவீதியினில்=அழகிய வீதியில் வீற் றிருக்கும், பெருமாளே=பெருமையிற் சிறந்தவரே; அருமாமதனை பிரியாத சரம்=அரிய அழகிய மன்மதனைப் பிரியாத கணைகள் போல வும், கயல் ஆர்=கயல் மீன் போலவும் சிறந்த, நயன கொடியார்தம் =கண்களையுடைய பொல்லாத பொது மாதர்களின், அழகுஆர்= அழகு நிறைந்ததும், புளகம்=பூரித்து இருப்பதும், புழுகுஆர்= புனுகு சட்டம் பூசப்பெற்றதும், சயிலத்து=மலை போன்றதுமான தனத்தை, அணையா=தழுவி, வலிகெட்டு உடல் தாழ=அதனால் வலிமை குன்றி உடல் நலிய, இருமா நடை புக்கு=இருமலிற்படுந் தன்மையடைந்து, உரைபோய்=பேச்சு அற்று, உணர்வு அற்று= உணர்வும் போய், இளையா=இளைத்து, உளம்உக்கு=உள்ளம் மெலிந்து, உயிர்சோர=உயிர் சோர்வுற்று, எரிவாய்நரகில் புகுதாத படிக்கு=நெருப்புடன் கூடிய நரகத்தில் புகுதாத வண்ணம், இரு பாதம் எனக்கு அருள்வாயே=தேவரீருடைய இரு திருவடிகளையும் அடியேனுக்குத் தந்தருளுவீராக.

## பொழிப்புரை

ஒப்பற்ற மாயையைச் செய்த கிரவுஞ்சமலை சிறு சிறு தூளாகுமாறு வலிமையுடன் விடுத்த அழகும் ஒளியும் உடைய வேலாயுதரே! மான்கள் உறையும் கானகத்தில் குறமகளாம் வள்ளிநாயகியிடம் உள்ளம் உருகிய பன்னிரு புயங்களை யுடையவரே! நாராயணர் பிரமதேவர் என்ற இருவருடைய கண்களால் காணமுடியாத சிவபெருமானுக்கும் அருமை வாய்ந்தவரே! செழிப்புடன் நீர் நிரம்பிய வயல்கள் சூழ்ந்த திருவண்ணுமலை நகரின் திருவீதியில் வீற்றிருக்கும் பெரு மிதம் உடையவரே! அரிய அழகிய மன்மதனைப் பிரியாத கணை போலவும், கயல்மீன் போலவும் சிறந்த கண்களை யுடைய பொல்லாத பொது மாதர்களின், அழகிய புளகாங்

கிதங்கொண்ட புனுகுவாசனை பூசப்பெற்ற மலைபோன்ற தனங்களைத் தழுவி, அதனால் வலிமை குன்றி, உடல் மெலிந்து, இருமி, உரையும் உணர்வும் அற்று, இணைந்து, உள்ளமும் உயிரும் சோர்வடைந்து, எரி மயமான நரகில் அடியேன் சேராதபடி, உமது இரு திருவடிகளைத் தந்தருளுவீராக

## விரிவுரை

**அருமாமதனைப் பிரியாத சரம்:—**

அரிய அழகுள்ள மன்மதனை விட்டுப்பிரியாத அவனுடைய பாணங்களைப் போன்றது பெண்களின் கண்கள்.

**கயலார் நயனம்:—**

கயல்மீன் போன்றது அக்கண்கள் கயல்மீன் இங்குமங்குந்திரிவது போல் விழிபுரண்டு அழகு செய்யும்.

**சயிலத் தணையா வலிகெட்டுடல் தாழ:—**

சயிலம்—மலை. இது உவம ஆகுபெயராகக் கொங்கையைக் குறிக்கின்றது. மலைபோன்ற பருத்த தனங்களைத் தழுவி அதனால் வலிமையிழந்து உடல் மெலிந்து அவலமுறுவர்.

**இருமா நடைபுக்கு:—**

மாதர் உறவால் இருமல் நோய் கைவரப்பெற்றுத் துன்புறுவர்.

... .........' தூறிருமல்
சூழலுற மூலகசு மாலமென நாறியுடல்
அழிவேனோ?'' —(வாலவயதாகி) திருப்புகழ்.

''இருமல் வந்தது தூக்கமொழிந்தது''
—(முனையழிந்தது) திருப்புகழ்.

**உரை போய்:—**

நோயின் மிகுதியால் பேசும் சக்தியற்றுத் துன்புறுவர்.

**உணர்வற்று:—**

அறிவும் இழந்து மயங்குவர்.

**இணையா உளமுக் குயிர் சோர:—**

இணைப்புற்று உள்ளமும் உயிரும் மெலிந்து நலிந்து துயரமடைவர்.

**எரிவாய் நரகில் புகுதா தபடி:—**

எரிவாய் நரகம்—கும்பிபாகம். மிகுந்த பாவஞ் செய்தவர்களை, செங்கல் சூளையில் சுடுவதுபோல், நமன்தமர் கும்பிபாகம் என்ற எரிமயமான நரகில் தள்ளி வாட்டுவர்.

நரகம் ஏழு: கூடகாலம், கும்பிபாகம், அள்ளல், அதோ கதி, ஆர்வம், பூதி, செந்து என்பன.

**இருபாத மெனக் கருள்வாயே:—**

"நரகிடை விழாதவாறு என்னை ஆட்கொண்டு முருகா உமது திருவடிகள் இரண்டையுந்தந்து ஆண்டருளுவீராக" என்று அருணகிரிநாதர் கருணைக்கடலாகிய கந்தவேளை வேண்டுகின்றார்.

**ஒருமால் வரையைச் சிறு தூள்பட:—**

கிரவுஞ்சன் என்ற அரக்கன் மலைவடிவாயிருந்து, அவ்வழி வரும் அமரர்கள் முனிவர்கள் சித்தர்கள் முதலியோரை மாயையால் மயக்கிப் பெருந்துன்பஞ்செய்து கொண்டிருந்தான். முருகவேள் வேலாயுதத்தை ஏவி அம்மலையைத் தூளாக்கியழித்தருளினார்.

**குறமாமகளுக் குருகா:—**

வள்ளிநாயகி மிகுந்த தவஞ்செய்தவள். அப்பிராட்டியின் அளவற்ற தவத்தைக் கண்டு முருகவேள் உள்ளம் உருகி அவரை ஆட்கொண்டருள்புரிந்தார்.

**திருமால் கமலப் பிரமா விழியிற் றெரியா அரன்:—**

நாராயணரும் நான்முகனும், பன்றியும் அன்னமுமாகிப் பலகாலும் தேடியும் அவர்களுடைய கண்களுக்குக் காண ஒண்ணாமல் அழலுருவாய் சிவமூர்த்தி நின்றனர். அதனால் அது அண்ணாமலை யெனப் பெற்றது.

> **"மேலுற எழுந்து மிகு கீழுற அகழ்ந்தும்**
> **மாலும் இருவர்க்கு அரியார் ஒருவர்"** —பெரிய புராணம்.

**அருணபுரியிற் றிருவீதியினில்:—**

அருணம்—சிவப்பு.

சிவந்த தீப்பிழம்பாக நின்ற திருவண்ணாமலை நகரின் திருவீதியில் முருகன் எழுந்தருளி அடியவர்க்குக் காட்சி தந்து அருள்புரிகின்றார்.

## கருத்துரை

அருணை வீதியில் நின்ற அண்ணலே! அடியேன் நரகில் விழாதபடி உன் திருவடியைத் தந்தருள்.

## திருப்புகழ்

அழுதுமா வாவெனத் தொழுதுமூ டுடுநெக்
கவசமா யாதரக் கடலூடுற்
றளவில்கோ லாகலச் சமயமா பாதகர்க்
கறியொணு மோனமுத் திரைநாடிப்

பிழைபடா ஞானமெய்ப் பொருள்பெரு தேவினைப்
பெரியஆ தேசபுற் புதமாய
பிறவிவா ராகரச் சுழியிலே போய்விழப்
பெறுவதோ நானினிப் புகல்வாயே

பழையபா கீரதிப் படுகைமேல் வாழ்வெனப்
படியுமா றுயினத் தனசாரம்
பருகுமா றுனனச் சிறுவசோ ணுசலப்
பரமமா யூரவித் தகவேளே

பொழுதுசூழ் போதுவெற் பிடிபடா பார்முதற்
பொடிபடா வோடமுத் தெறிமீனப்
புணரிகோ கோவெனச் சுருதிகோ கோவெனப்
பொருதவே லாயுதப் பெருமாளே.

### பதவுரை

பழைய பாகீரதி படுகைமேல்=பழமையான கங்கா நதியின் நடுவில், வாழ்வுஎன=செல்வக் குழந்தையாய்த் தோன்றி, படியும் ஆறு ஆயின்=பணிந்துவந்த ஆறு தாய்மார்களின், அ தன சாரம் பருகும்=அத்தனத்தின் சாரமான பாலைக்குடித்த, ஆறு ஆனன சிறுவ=ஆறு திருமுகங்கள் கொண்ட குழந்தையே! சோண அல பரம=சிவந்த மலையாகிய திருவண்ணுமலையில் வாழும் பெரியவரே! மாயூர=மயில் வாகனரே! வித்தக வேளே=ஞானமூர்த்தியே! பொழுது சூழ்போது=பொழுதுபோம் அந்தி வேளையிலே, வெற்பு இடிபடா=கிரவுஞ்சமலை இடிபடவும், பார் முதல் பொடிபடாஓட=பூமி முதலியவை தூள் எழுந்தோடவும், முத்து எறி=முத்துக் களை வீசுவதும், மீனம்=மீன்களையுடையதுமான, புணரி கோ கோ என=கடல் கோ கோ என்று முறையிடவும், சுருதி கோ கோஎன=வேதங்கள் கோ கோ என்று முறையிடவும், பொருத=போர் செய்த, வேலாயுத=வேலாயுதத்தையுடைய, பெருமாளே=பெருமையில் மிக்கவரே! அழுதும்=அன்பு மேலீட்டால் அழுதும், ஆவா என தொழுதும்=ஆவா என இரங்கித் தொழுதும், ஊடு ஊடு

நெக்கு=இடையிடையே உள்ளம் நெகிழ்ந்து, அவசமாய்=தன்வச மற்று, ஆதர கடல் ஊடு உற்று=அன்பு என்னும் கடல் நடுவில் திளைத்து, அமைவுஇல்=ஆறுதல் இல்லாத, கோலாகல=ஆடம்பர முடைய, சமய மாபாதகர்க்கு=சமயவாதம் புரியும் பெரிய பாவி கட்கு, அறிய ஒணு=அறிய முடியாத, மோன முத்திரை நாடி= மௌனக் குறியைத் தேடி, பிழைபடா=தவறுதல் இல்லாத, ஞான மெய்பொருள் பெருதே=ஞானத்தின் உண்மைப் பொருளை அடி யேன் அடையாமலே, வினை பெரிய ஆதேச=வினைக்கு ஈடாக பெரிய வேறுபாட்டையடையும், புற்புதம் ஆய=நீர்க்குமிழிக்கு நிக ரான, பிறவி வாராகர சுழியிலே=பிறவியென்னும் கடலின் நீர்ச் சுழியிலே, நான் போய் விழ பெறுவதோ=அடியேன் சென்று விழக் கடவேனே, இனி புகல்வாயே=இனி எனக்கு நல்லுரை கூறியருளு வீராக.

## பொழிப்புரை

பழமையான கங்காநதியின் நீர்நிலை நடுவே செல்வக் குழந் தையாய்த் தோன்றி, கார்த்திகை மாதர்களாகிய ஆறு அன்னை களின் முலைப்பாலைக் குடித்த ஆறு திருமுகங்கள் கொண்ட குமாரமூர்த்தியே! திருவண்ணுமலையில் இருக்கும் பெரிய பொருளே! மயில் வாகனரே! ஞானமூர்த்தியே! அந்தி வேளை யில் கிரவுஞ்சமலை பொடிபடவும், பூமி முதலிய உலகங்கள் பொடியாகியோடவும்முத்துக்களை வீசும் மீன்களையுடையகடல் கோகோ என்று முறையிடவும், வேதங்கள் கோகோ என்று முறையிடவும் போர்புரிந்த வேலாயுதத்தை யேந்திய பெருமித முடையவரே! (பக்தியின் முதிர்ச்சியால்) அழுதும், ஆஆஎன இரங்கித் தொழுதும், இடையிடையே உள்ளம் நெகிழ்ந்தும், தன்வசம் இழந்தும், அன்பு என்னும் கடலில் மூழ்கி, ஆறுதல் இல்லாது சமயவாதம் புரியும் பெரும்பாதகர்கட்கு அறிய முடி யாத மௌன முத்திரையை நாடி, தவறுதல் இல்லாத ஞான மெய்ப்பொருளை அடையாமல், வினைக்கு ஈடான பெரிதும் வேறுபாடு அடையும் நீர்க்குமிழிக்கு நிகரான பிறவிக்கடலில் அடியேன் விழக்கடவேனே? இனி எனக்கு நல்லுரை கூறி யருளுவீராக.

## விரிவுரை

இத் திருப்புகழ் மிகவும் அருமையானது. இதனை அன்பர் கள் மனனஞ்செய்து நித்தியம் பாராயணம் புரிவது அவசிய மாகும். பிறவித் துன்பந்தொலைய இது உதவும்.

**அழுதும்:—**

அடியார்கள் அன்பின் மிகுதியால் இறைவனை நினைந்து கண்ணீர் மல்கி அழுதல் வேண்டும்.

"அழுதால் உன்னைப் பெறலாமே" —திருவாசகம்.

"விழியால் புனல்சிந்தி விம்மியழு நன்மைவேண்டு மென்றே"
—பட்டினத்தார்.

"அழுதழுதாட்பட முழுதுமலாப் பொருள் தந்திடாயோ"
—(விரகற) திருப்புகழ்.

ஆவாவெனத் தொழுதும்:—

அன்பு மேலீட்டால் ஆற்றுமை யடைந்து ஆ ஆ எனக் கூறி இறைவனைத் தொழுவது.

"நெக்கு நெக்குள் உருகி உருகி—அழுதும் தொழுதும் வாழ்த்தி"
—திருவாசகம்.

ஊடுடு நெக்கவசமாய்:—

அன்பு செய்யும்போது இடையிடையே உள்ளம் நெகிழ்ந்து தன்வசம் இழத்தல். இவைகள் அடியார்களிடம் அன்பு மிகுதியால் நிகழ்பவை.

ஆதரக்கடலூடுற்று:—

அன்புக் கடலில் முழுகுதல்.

அமைவில் கோலாகலச் சமய மாபாதகர்க் கறியொணு மோன முத்திரைநாடி:—

மோனமுத்திரை—மோனத்தின் அடையாளம். மோனந் தான் ஞானத்தின் முடிவு. இந்த மோனநிலை மிக மிக அருமையானது. ஆறுதல் இன்றி ஆடம்பரம் புரிந்து தர்க்கஞ் செய்கின்ற சமயவாதிகளாம் பாதகர்க்கு இது அறிய வொண்ணுதது.

பிழைபடா ஞானமெய்ப் பொருள் பெறுதே:—

தவறுதல் இல்லாத ஞான உண்மைப் பொருளைப் பெறுதல் வேண்டும். அதனைப் பெறுது கைவிடுதல் கூடாது.

வினைப் பெரிய ஆதேசம்:—

வினையினுல் பெரிய வேறுபாட்டை யடைந்து உயிர்கள் பிறக்கும்.

ஆதேசம்—திரிபு.

புற்புதமாய பிறவி வாராகரச் சுழியிலே போய்விழப் பெறுவதோ:—

புற்புதம்—நீர்க்குமிழி. நீர்க்குமிழிபோல் தோன்றி விரைந்து அழியக்கூடிய பிறவிகளாகிய கடலில் அடியேன் விழலாமோ? விழுந்து துன்புறலாமோ? கூடாது.

இனிப் புகல்வாயே:—

இனி அடியேனுக்கு நல்லுரை கூறியருளுக.

**பழையபா கீரதிப் படுகைமேல் வாழ்வென:—**

மிகவுந் தொன்மையாகிய கங்கை நதியின் இடையில் முருகவேள் சிறு குழவியாகத் தோன்றியருளினுர்.

**படியு மாருயினத் தனசாரம் பருகி:—**

படியும்—தாழ்ந்து பணிவுடன் வந்த. ஆறு ஆயின் எனப் பதப் பிரிவு செய்க. ஆறு தாய்மார்களாகிய கார்த்திகைப் பெண்களின் தனசாரமாகிய முலைப்பாலை பசிதாகமில்லாத பரம்பொருளாகிய பரமன் அவர்களை மகிழ்விக்கும் பொருட்டு உண்பான்போல் நடித்தருளினுர்.

**சோணுசலப்புரம்:—**

சோணுசலம்—திருவண்ணுமலை. சோணுத்திரி, சோண சைலம், சோணகிரி என்று பலபேர்கள் அதற்கு உண்டு.

பரமன்—மிகவும் பெரிய பொருளாய் விளங்குபவன்.

**மாயூர:—**

மயில் மீது எழுந்தருளி வருபவன்.

**வித்தகவேளே!**

வித்தகம்—ஞானம்.

வேள்—உபகரிக்கின்றவன்.

எல்லா உலகங்கட்கும் உயிர்கட்கும் உபகரிக்கின்ற ஞான மூர்த்தி முருகன்.

**பொழுது சூழ்போது வெற்பிடிபடா:—**

கிரவுஞ்ச மலையை முருகவேள் மாலை நேரத்தில் இடித்துப் பொடிபடுத்தினுர்.

"செங்கதிர் மறைந்து போனுன்" என்று கந்தபுராணங் கழறுகின்றது.

**புணரி கோகோ என:—**

வேல் விட்டபோது, அதன் வெம்மையைத் தாங்காது கதறி வாய்விட்டு கோகோ என்று கடல் முறையிட்டது.

> "வாரிகோ கோவென வாய்விட வந்தெதிர்
> சூரமா சேனையை மோது களந்தனில்"
>
> —பூதவேதாள வகுப்பு.

**சுருதி கோகோவென:—**

எம்பெருமான் வேலை விட்டபோது வேதங்கள் அவருடைய பெருமையைக் கூறி முறையிட்டன. வேதம் காது வழியாகக் கேட்டு ஓதும் இயல்புடையது அதனுல் "சுருதி" எனப் பெற்றது.

# கற்பு

## மணி

வறுமையென்ற சிறுமையால் வாடினுள் மணி. அவளுடைய கணவன் கதிரேசனுக்குச் சதா நோய். வேலை செய்தாலே போது மான ஊதியம் கிடைப்பதில்லை. கதிரேசனுக்குப் பல நோய்களால் உடம்பு இளைத்துக் களைத்திருந்தது. வேலை செய்யுந் திடம் இல்லை. உள்ளம் சோர்ந்து உணர்வு சோர்ந்து உயிர் சோர்ந்து படுத்த வண்ண மாகவே இருப்பான்.

மணி அந்த வூரில் உள்ள தனவந்தர்கள் வீட்டில் போய் பாத்தி ரங்களை அலம்பிக் கொடுத்தும், ஆடைகளைத் தோய்த்துக் கொடுத் தும், அவர்கள் தருகின்ற உணவையும் சிறிய ஊதியத்தையும் கொண்டு கணவனைப் பசியாறச் செய்து, மிகுதியுள்ள சிறிய உணவை யுண்டு வாழ்ந்தாள். கணவன் ஒரு வேலைக்கும் உதவாக்கரையாக இருப்பது பற்றி அலட்சியம் செய்ய மாட்டாள்.

கல்லென்றுலும் கணவன்; புல்லென்றுலும் புருஷன் என்று கணவனை மதித்துக் கணவனுக்கு வேண்டிய பணிவிடைகளைச் செய்வாள்.

கடும் வெயில். அனல் காற்று வீசியது. பறவைகள் எல்லாம் வாடி வருந்தி மரங்களில் அமர்ந்திருந்தன. உடல் வலிமையில்லாத கதி ரேசன் வெயிலின் கொடுமையைத் தாங்கமாட்டாமல் தவித்தான். மணி கிழிந்த பனைவோலை விசிறியால் அவன் அருகில் அமர்ந்து விசிறிக் கொண்டிருந்தாள். அவளுடைய அன்புத் திறத்தைக் கண்டு கதிரேசன் உள்ளம் உருகினுன். அவனுடைய கண்கள் குளமாகி விட்டன.

---

பொருத வேலாயுத:—

பிறவியாகிய பெருங்கடல் வற்றவும் வினைக்கூட்டமாகிய கிரவுஞ்சமலை இடியவும் போர்புரிவது ஞானமாகிய வேல் என வுணர்க.

### கருத்துரை

அருணுபுரிமேவும் அண்ணலே! பிறவிச் சுழலில் அடி யேன் விழா வண்ணம் ஆண்டருள்.

"மணி! நான் முற்பிறப்பில் நிரம்பப் பாவஞ் செய்தவன். மனதில் ஊக்கம் இருந்தாலும் உடம்பில் தெம்பில்லை. ஒரு வேலையும் என்னால் செய்ய முடியவில்லை. எனக்கு நல்ல உடையில்லை. சத்தான உணவில்லை. வசதியான படுக்கையில்லை. ஆனால் இத்தனை இடர்களுக்கு இடையே ஒரு சுகம் உண்டு. அதுதான் நீ. ஏதோ முற்பிறப்பில் செய்த நல்வினைப் பயனால் நீ எனக்கு மனைவியாகக் கிடைத்தனை. உன்னுடைய ஒப்பற்ற அன்பை நினைத்தவுடன் உள்ளம் குளிர்கின்றது. வறுமையாகிய பாலைவனத்தில் நீ கற்பகத் தருவைப் போல் நிழல் தருகின்றாய். பணமும் பதவியுமுள்ள கணவனைத்தான் மங்கையர்கள் மதிப்பார்கள்; துதிப்பார்கள். ஒன்றுமில்லாத அஷ்ட தரித்திரம் பிடித்த என்னை நீ கண்ணை இமை காப்பதுபோல் காத்து ரட்சிக்கின்றாய். நீ பஞ்சுபடாத பாடுபட்டு, உன் உடம்பு தேய உழைத்து எனக்கு உணவு தருகின்றாய்.

" இல்லதென் இல்லவள் மாண்பானால் உள்ளதென்?
இல்லவள் மாணாக் கடை"

என்ற திருவள்ளுவரது தேன்மொழிக்கு நீ முழு இலக்கியமாக அமைந்திருக்கின்றாய். பொன்னால் பொன் படைத்தவருக்குச் சுகமுண்டு. என்னால் உனக்குச் சுகமில்லை. உன்னால் எனக்குச் சுகமுண்டு. நதியினால் வயல்கள் நலமுறுகின்றன. வயலால் நதிக்கு என்ன லாபம். அதுபோல் நீ என்னை சுகப்படச் செய்து, சுகம் என்பது எங்கே யிருக்கின்றது என்பதை அறியாமலும், அதனை நினைக்காமலும் காற்றாடிபோல் அலைந்து உலைந்து தொழில் புரிகின்றாய். நீ குணக்குன்று. உனக்கு நீ வழிபடுகின்ற விநாயகப் பெருமான்தான் அநுக்கிரகம் புரிய வேண்டும்" என்று தழுதழுத்த குரலில் கூறிக் கண்ணீர் வடித்தான். இந்தப் புகழுரைகளைக் கேட்ட மணி தலைகுனிந்தாள்.

"என் அன்பின் சிகரமே! தாங்கள் இப்படி என்னைப் புகழ்வதை நான் விரும்பவில்லை. என் கடமையைத்தானே செய்கின்றேன். இதில் புகழுக்கு இடமே கிடையாது. தொழுநோய் முதிர்ந்த கிழக் கணவனை தலையால் சுமந்தாள் நளாயனி. தளர்ந்த வயதுடைய சியவனமுனிவரைத் தெய்வமாக நினைத்துப் போற்றினாள் சர்யாதி வேந்தன் புதல்வியாகிய சுகன்னி. நான் என்ன செய்துவிட்டேன்? தினந்தோறும் வாய்க்கு உணவு எடுத்து கை ஊட்டுகின்றது. வாய் "என் அருமைக் கையே! உனக்கு நன்றி" என்று கூறுகின்றதா? இல்லை. அதுபோல் கடமையை ஒரு சிறிது செய்யும் கைபோன்ற எனக்குத் தாங்கள் நன்றி கூறலாமா? தாங்கள் எனது வழிபடு தெய்வம். தாங்கள் உடல் வலிமையிருந்தால் உழைக்கத்தான் செய்வீர்கள். தாங்கள் நோயின்றி யிருந்தால் அதுவே எனக்குப் போதும். விநாயகர் நம்மைக் காப்பாற்றுவார். அவர் கருணாநிதி. அவருடைய கருணை நமது வறுமையை நீக்கும்" என்றாள்.

நேரமாகிவிட்டது என்று எண்ணித் தான் வேலை செய்யும் வீட்டை நோக்கி விரைந்து சென்றாள். அவள் வேலை செய்யும் வீடுகளில் அவளுடைய நற்குணங்களைக் கண்டு கண்ணியமாக நடந்து கொள்ளுவார்கள்.

கரடுமுரடான வழியில் வண்டி ஆடி யசைந்து போவதுபோல் மணியின் வாழ்க்கைச் சகடம் இடர்ப்பட்டு நடந்தது.

தினந்தோறும் அதிகாலையில் தூக்கத்தைவிட்டு மணி எழுந்திருப்பாள். பல் விளக்கி கைகால்களைத் தூய்மை செய்து கொள்ளுவாள். திருநீறும் குங்குமமும் இட்டுக் கொண்டு, கணவனிடம் விடை பெற்றுக் கொண்டு புறப்படுவாள். கணவனுடைய கந்தல் வேட்டிகளை எடுத்துக் கொண்டு, அருகில் ஓடும் ஆற்றில் அவைகளைத் தோய்த்து உலர்த்துவாள். விநாயகப் பெருமானைத் தியானித்து நீராடுவாள்.

ஆற்றங்கரையில் அரச மரத்தடியில் எழுந்தருளியுள்ள பிள்ளையாரைக் குடநீரால் திருமுழுக்கு செய்வாள். அருகில் உள்ள அறுகு எருக்கு இவைகளை யெடுத்துச் சூட்டுவாள். "கருணைக் கடலே! இடர் களையும் எந்தையே! விக்கின விநாயக வள்ளலே! எனக்கு உன் பாதம் ஒன்றுதான் துணை. நான் தீர்க்க சுமங்கலியாக இருக்க அருள் செய். என் கணவனுர் நோயின்றி வாழக் கருணை செய். அப்பனே! என்னைக் காப்பது நின் கடன்" என்று துதி செய்து கண்ணீர் வடிப்பாள். சிறிது நேரம் தன்னை மறந்து நிற்பாள்.

காலங்கடந்து விடக்கூடாது என்று கருதி உலர்ந்த ஆடைகளை எடுத்துக்கொண்டு, தண்ணீர்க் குடத்தைத் தலையில் சுமந்துகொண்டு தன் குடிசைக்குப் போய், குடத்தை வைத்துவிட்டு, அன்புக் கணவனுக்கு அஞ்சலி செய்வாள்.

வேலை செய்யும் வீடுகளை நாடிச் சென்று பம்பரமாகச் சுழன்று அவர்கள் இட்ட பணிகளை யெல்லாம் செய்வாள். பசியால் களைத்து நிற்பாள். அவர்கள் தரும் உணவை எடுத்துக்கொண்டு தன் வீட்டை யடைந்து கணவனை உண்பித்துத் தான் சிறிது உண்ணுவாள். இப்படி மாடு போல் உழைத்து வந்தாள்.

ஒருநாள் கனவில் சிவந்த யானையொன்று வந்து அவள்மீது மலர் சொரிவதாக ஒரு காட்சியைக் கண்டாள். அதுவும் விடியற்காலை கண்ட கனவு. எழுந்தாள். அவள் உடம்பு புல்லரித்தது. விநாயகர் தனக்கு அருள் புரிந்ததாகக் கருதினுள்.

நல்ல கனவு கண்டால் மறுபடியும் தூங்கக்கூடாது. அதனுல் அவள் குடத்தை எடுத்துக் கொண்டு நதிக்குச் சென்றாள். நதியில் நீராடி, பிள்ளையாருக்கு நீர் வார்த்து, மலர்களால் அர்ச்சித்து, வலம்

வந்தாள். அப்போது இருள் சூழ்ந்திருந்தது. இன்னும் விடியவில்லை. பனிப்படலம் எங்கும் பரவியிருந்தது.

அவள் எதிரே வெள்ளை வெளேர் என்று பேய் ஒன்று நின்றது. அதனைக் கண்டு அவள் திடுக்கிட்டாள். பெண்ணல்லவா? பெரும் பயம் அடைந்தாள். பிள்ளையாரைக் கடைக் கண்ணால் பார்த்து, "அப்பனே! நான் என்ன செய்வேன்!" என்று மனதில் விநாயகரைத் தியானித்தாள்.

பேய் "தாயே! நீ பதிவிரதா சிரோன்மணி. உனக்கு நான் இடர் புரியமாட்டேன். உன்னால் எனக்கு ஒரு உபகாரம் வேண்டும் இந்தப் பிள்ளையார் கோவிலில் தினம் நாதஸ்வரக்காரன் வந்து அபஸ்வர மாக ஊதுகின்றான். என்னால் அந்த அபஸ்வரத்தைக் கேட்டுச் சகிக்க முடியவில்லை. பெரிய வேதனையாக இருக்கின்றது. வெந்தணல் மீது படுக்கலாம். விஷத்தையும் குடிக்கலாம். ஆனால் இந்த அபஸ்வரத் தைக் கேட்க முடியவில்லை. எனக்கு நல்ல ஒரு அரசமரம் இருக்கு மிடத்தைக் காட்டு. அங்கு நான் போய்விடுவேன். உனக்குக் கோடி புண்ணியமுண்டு" என்று வேண்டியது.

மணி சிறிது தைரியம் அடைந்தாள். "ஏ பேயே! நான் சினப் பேய், மனப் பேய், ஆசைப் பேய் முதலிய பேய்களைக் கண்டு அடக்கி யுள்ளேன். இன்று உன்னைக் கண்டேன். நீ கவலைப்படாதே. இங் கிருந்து இரு கல் தொலைவில் ஒரு ஐயனார் கோயில் இருக்கின்றது. அங்கு ஒரு இளம் அரச மரம் உண்டு. அங்கு போய் சுகமாக இரு" என்றாள்.

பேய் "தாயே! எல்லா மங்களங்களும் உனக்கு உண்டாகட்டும். நான் அங்கு போய் வாழுவேன். உனக்கு ஒரு உதவி செய்வேன். அடுத்த ஊர் ஜமீன்தாருடைய மகளை நான் பிடித்துக் கொள்ளு வேன். எந்த மந்திரவாதி வந்தாலும் போகமாட்டேன். நீ வந்து பிள்ளையார் மந்திரத்தைச் சொன்னவுடன் விலகிவிடுவேன். அந்த ஜமீன்தார் தரும் செல்வத்தைக்கொண்டு நீ கவலையின்றி காலத்தைக் கழிக்கலாம்" என்று கூறி மறைந்துவிட்டது.

மணிக்கு உடம்பெல்லாம் வேர்த்துவிட்டது. பிள்ளையாரைத் தொழுதுவிட்டு வீடு திரும்பினாள். ஒரு விதமான அச்சம் புகுந்து அவளை வருத்தியது. முழு மனதுடன் விநாயகரைத் தியானித்துத் தன் கடமைகளைச் செய்தாள்.

அந்தப் பேய் அவளால் அறிவிக்கப்பட்ட ஐயனார் கோயில் அரச மரத்துக்குச் சென்று சுகப்பட்டது. அபஸ்வரத்தால் வரும் வேதனை நீங்கியது.

அடுத்த வூர் ஜமீன்தாரர் புதல்வியைப் பிடித்துக் கொண்டது. ஜமீன்தாரருக்கு ஒரே புதல்வி. செல்வமாக வளர்த்து வந்தார்.

பேய் பிடித்த பின் அவள் தலைவிரித்து ஆடினாள். ஆடைகளைக் கிழிப்பாள். அணிகலங்களைக் கழற்றி எறிந்தாள். உண்ணாமலும் உறங்காமலும் ஓடினாள். பாத்திரங்களை வீசி எறிந்து உடைப்பாள். ஜமீன்தாரர் தன் அருமந்த மகளுக்கு ஏற்பட்ட இன்னலைக் கண்டு மிகமிக வருந்தினார். சொல்ல முடியாத துயரமுற்றார். பலப்பல மந்திரவாதிகளை அழைத்தார். மந்திரவாதிகள் பெரும் பூஜை போட்டு, எலுமிச்சம்பழங்களை அறுத்து வீசி எறிந்து, சாம்பராணிப் புகை புகைத்து மந்திர உச்சாடனம் புரிந்தார்கள். நெருப்பை நெய் விட்டணைக்க முயன்றது போல் ஆயிற்று. அவர்கள் முயற்சி பேய் மேலும் மேலும் ஆரவாரஞ் செய்து ஆடியது. மந்திரவாதிகளைக் கடித்து இடித்துக் கிள்ளித் துன்புறுத்தியது. மந்திரவாதிகள் நடுங்கி ஒடுங்கி ஓடி ஒளிந்தார்கள். ஜமீன்தாரர் கவலைக் கடலில் முழுகினார்.

"தெய்வமே! எனக்கு ஒரே பெண். நல்ல இடத்தில் கல்யாணம் பண்ணிக் கொடுத்து என் மகள் மணவாளனோடு வாழ்கின்ற புனித வாழ்வைக் கண்டு களிக்க வேண்டும் என்று இருந்தேன். என் எண்ணம் பகற் கனவானதே. இப்படியும் என்னைச் சோதிக்கலாமா? சோதனை யென்னும் வேதனையை என்னால் தாங்க முடியவில்லையே. நான் என்ன செய்வேன்? உன் கருணையை நாடி நிற்கின்றேன்" என்று இறைவனிடம் முறையிட்டார்.

நாடு நகரம் ஊர் எங்கும் இந்தப் பேயைப் பற்றிய பேச்சே நடமாடியது. இச்செய்தியை மணி யறிந்தாள். தன்னை வாட்டி வதைக்கும் வறுமைப் பேய் விலகுங்காலம் வந்து விட்டதென்று மகிழ்ச்சி யடைந்தாள். நெற்றியில் நிரம்ப வெண்ணீறும். செக்கச் சிவந்த குங்குமப் பொட்டும் தரித்துக் கொண்டு, பிள்ளையாருக்கு அபிஷேகம் புரிந்த தண்ணீரை ஒரு கமண்டலத்தில் எடுத்துக் கொண்டு கணவனிடம் விடைபெற்றுப் புறப்பட்டாள். நேரே ராமபாணம்போல் விரைந்து நடந்து ஜமீன்தாரின் அரண்மனையை யடைந்தாள்.

ஜமீன்தாரரைக் கண்டு தொழுதாள்.

"அம்மா! வாருங்கள். தாங்கள் யார்? உங்களுக்கு நான் என்ன செய்யவேண்டும்."

"ஐயனே! எனக்கு ஒன்றும் வேண்டாம், உங்கள் செல்வப் புதல்வியைப் பிடித்து அலக்கழிக்கும் பேயை ஓட்டும் பொருட்டு வந்தேன்."

"என்னம்மா! பேயை ஓட்ட வந்தனையா? பெரிய பெரிய மலையாள மாந்திரிகர்கள் எல்லாம் ஓட்ட முடியாமல் ஓட்டம் பிடித்தார்கள். பேயெங்கே? நீயெங்கே? நீ ப்ரமசாதுவாகக்காட்சித் தருகின்றாய். உன்னால் ஆகின்ற காரியமா இது?"

"அண்ணலே! "உருவங்கண்டு எள்ளாமை வேண்டும்" என்ற வள்ளுவர் வாக்கை நீர் படித்ததில்லையா? எந்தப் புற்றிலே எந்தப் பாம்பு இருக்குமோ? நான் அதிகம் பேச விரும்பவில்லை. பேச்சைக் குறைத்தவளே பெரியவள். நீர் புதல்வியைக் காட்டும். இந்த மந்திர நீர் பேயை ஓட்டும்" என்றாள்.

"நல்லது" என்று ஜமீன்தாரர் மணியை மகள் இருக்குந் தனி யறைக்கு அழைத்துச் சென்றார்.

மணி அங்குபோய் அபிஷேக நீரை "ஓம் காம் கணேசாய நம:" என்று கூறித் தெளித்தாள். "போய்விடுகின்றேன்! போய்விடுகின்றேன்" என்று கூறிப் பேய் புறப்பட்டது. புறப்பட்டுப் போகும் போது, மணியின் காதில் "நன்றிக் கடனுக்காக உன் நலத்துக்காக நான் விலகிச் செல்லுகின்றேன். மற்றும் எங்காவது இதுமாதிரி வந்து என்னை ஓட்ட முயற்சிக்காதே. முயற்சித்தால் உன் உயிரை மாய்த்து விடுவேன்" என்று கூறிவிட்டு விலகிச் சென்றது.

ஜமீன்தாரரின் புதல்வி பழைய நிலையை யடைந்து நாணத்துடன் உடைகளை சரிப்படுத்திக் கொண்டு பிதாவைத் தொழுதாள். இந்த அதிசயத்தைக் கண்ட ஜமீன்தாரர் பெருமகிழ்ச்சி யடைந்தார். மணியை வணங்கினார். மணியின் கணவனுரை யழைத்து உபசரித்தார். அந்த வூரில் நல்ல வீடும், பத்து ஏக்கர் நிலமும், பதினாயிரம் ரூபாயும் ஆடைகளும் அணிகலன்களும் வழங்கினார்.

ஜமீன்தாரர் தந்த பரிசுகளைப் பெற்ற மணி தன் கணவனுருடன் புதிய வீட்டில் குடி புகுந்து இன்புற்று வாழ்ந்தாள். நல்ல பால், தயிர், நெய், பழங்கள் இவைகளை யுண்டு கதிரேசன் உடல் நலமுற்றான். நிலங்களை யுழுவித்து நல்ல மாசூல்களை யடைந்து கவலையின்றி வாழ்ந்தான். மணியின் பெருமை எங்கும் பரவியது. மணி அன்றாடம் ஆற்றங்கரைப் பிள்ளையாரை வழிபடுவதை விடாது பூஜை செய்து வந்தாள்.

அந்தப் பேய் சிங்கபுரத்து ஜமீன்தாரருடைய மனைவியைப் பிடித்துக் கொண்டது. மனைவி ஓடுவதும் குதிப்பதுமாகப் பேயால் துன்பப்படுவதைக் கண்ட சிங்கபுரம் ஜமீன்தாரர் வேதனையடைந்தார். இந்த ஜமீன்தாரருக்கு ஒரு கடிதம் எழுதி யனுப்பினார்.

"அன்பு கெழுமிய ஐய! வணக்கம் பல. தங்கள் புதல்வியைப் பற்றிய பேயை ஓட்டிய மந்திரவாதியைத் தயவு செய்து இங்கு அனுப்பி வைக்குமாறு வேண்டுகின்றேன்.

இங்ஙனம்

சிங்கபுரம் புவனேந்திர பூபதி

இந்தக் கடிதத்தைக் கண்ட ஜமீன்தாரர் மணியை அழைந்தார். "அம்மா! உன்னால் எனக்கு நல்ல புகழ். என்னைப் பார்க்கினும் பன் மடங்கு பெரியவர் சிங்கபுரத்து ஜமீன்தாரர். அவளுடைய மனைவி யாரைப் பேய் பிடித்துள்ளதாம். உன்னை அங்கு அனுப்புமாறு எனக்குக் கடிதம் எழுதியுள்ளார். நீ போய் பேயை ஓட்டிவிட்டு வா. அவர் தரும் சன்மானங்களைப் பெற்றுக் கொள். இதனால் அவருடைய தயவு எனக்குக் கிடைக்கும். நம்ம அரண்மனை வண்டியில் போய் வா"[1] என்றார்.

இதைக் கேட்ட மணி நடுங்கினாள். இனி தனக்கு வாழ்வு இல்லை என்று எண்ணினாள். அதனை வெளிக்குக் காட்டிக் கொள்ளாமல் புறப்பட்டாள். வண்டியில் கண்களை மூடிக் கணேசப் பெருமானை தியானஞ் செய்து கொண்டே போனாள்.

ஜமீன்தாரர் மணியை வரவேற்று மனைவியிடம் அழைத்துப் போய்க் காட்டினார். பேய் "அடியே' இங்கு மறுபடியும் வந்தாயா?" என்று வீடு இடிய காது செவிடுபடக் கூறி கர்ஜனை செய்தது.

மணி மெல்ல அதன் அருகில் போய் "பேயே! அந்த அபஸ்வர நாதசுர வித்வான் இங்கே வாசிக்க வருகின்றான். அதனை அறிவிக்கும் பொருட்டு வந்தேன்" என்றாள். அவ்வளவுதான் பேய் அலறிக் கொண்டு "இதோ போய்விட்டேன்" என்று கூறி ஓடிப்போய் விட்டது.

அவள் என்ன சொன்னாள் என்பதை ஜமீன்தாரர் அறிந்தாரில்லை. ஏதோ மந்திரம் கூறிப் பேயை விரட்டிவிட்டாள் என்று கருதி மகிழ்ந் தார். மணிக்குப் பதினாயிரம் ரூபாயும் பட்டாடையும் பொன்னா பரணங்களும் பரிசில் தந்து உபசரித்து அனுப்பினார்.

மணி கணேசருடைய கருணையை நினைத்துக் கண்ணீர் வடித் தாள். ஜமீன்தாரர் தந்த செல்வத்துடன் தன் மாளிகை வந்து அவைகளைக் கணவனாரிடம் தந்து மகிழ்ந்தாள்.

சில காலத்துக்குப் பின் வேறு ஒரு சிற்றரசன் புதல்வியை அப் பேய் பிடித்து அல்லல் செய்தது. மணிக்கு அழைப்பு வந்தது. அவள் தடுமாற்ற மடைந்தாள். என்ன செய்வாள். அந்த அபஸ்வரநாதசுர வித்வானைக் கூடவே அழைத்துக் கொண்டு போனாள். அபஸ்வர நாதசுர வித்வானைப் பார்த்ததும் பேய் பிடித்தது ஓட்டம். மணிக்கு 'மணி' வந்தது.

தனக்கு வாழ்வு தந்த அபஸ்வர வித்வானுக்குச் சிறிது பணந் தந்து வாழ வைத்தாள். அபஸ்வரம் பேய்க்கும் பிடிக்காது என்பதை உணர்ந்தாள். கணவனுடன் இனிது வாழ்ந்தாள்.

முருகா

# குரு நிந்தை கொடிது

குரு—மன இருளைப் போக்கும் ஞான விளக்கு போன்றவர். குருநாதர் அறிவுநலத்தை அள்ளி வழங்குபவர். தாய் தந்தையர் தருவது உணவு; குருநாதர் தருவது உணர்வு. உணவு எத்துணை உயர்ந்ததாயினும் 5 மணி நேரத்தில் செமித்துவிடும். குரு தரும் உணர்வு பல பிறவிகட்கும் தொடர்ந்து வந்து உதவும்.

ஒருமைக்கண் தான்கற்ற கல்வி ஒருவற்
கெழுமையும் ஏமாப் புடைத்து.

செல்வம் தந்தை தருகின்றார். குருமூர்த்தி கல்வியைத் தருகின்றார். செல்வத்தில் பல குற்றங்கள் அடங்கியிருக்கும். ஒரு பக்கம் மேடானால் பல பக்கம் பள்ளமாகும். இதுபோல் ஒருவன் பணக்காரனாக ஆவானாயின் பலர் ஏழையாக வேண்டும். பலர் ஏழையானாலன்றி ஒருவன் செல்வச் சீமானாக ஆக முடியாது. பலரை உழைக்க வைத்துத்தான் ஒருவன் தனவந்தனாக ஆகவேண்டும். பொய் புனை சுருட்டு முதலிய பிழைகள் பல செய்துத்தான் ஒருவன் பெரும் பணக்காரனாக ஆகின்றான். ஆனால் கல்விச் செல்வம் அப்படித்தன்று. பலரை மூடனாக்கி ஒருவன் அறிஞனாக ஆகவேண்டும் என்ற நியதி கிடையாது. நெல் நிலத்திலிருந்து விளைவதுபோல், கல்வி கற்பதனால் அறிவுச் செல்வம் தானே விளைகின்றது, ஆதலால் செல்வத்திலும் மிக மிக உயர்வுடையது கல்வி நலம் எனவுணர்க. இத்தகைய கல்விப் பொருளை நமக்கு வழங்குபவர் குருநாதர்:

தன் பால் வேலை செய்யும் ஒருவன் முதலாளியாக ஆவதை ஒருவன் விரும்ப மாட்டான். தன் பால் கற்கும் மாணவன் சிறந்த அறிஞனாக ஆவதைக் கண்டு ஆசிரியர் பெருமகிழ்ச்சியுறுகின்றார். ஒவ்வொரு மாணவனும் பெரும் பதவிக்கு வரவேண்டும் என்று ஆசிரியர் ஆசைப்படுகின்றார். ஆனபடியால் குருநாதனைத் தெய்வமாகக் கருத வேண்டும்.

''குருவை மனிதனாக நினைப்பவன் பெற்ற புதல்வியை நான் மணந்து கொள்ள மாட்டேன்'' என்று தன் தந்தையிடம் கூறினார் மிருககண்டுய் என்ற முனிவர்.

''எழுத்தறிவித்தவன் இறைவனாகும்'' என்று ஆன்றோர் கூறுவர்.

எப்போதுந் தப்பாது குருநாதனை வழிபட வேண்டும். இதற்கு மாறாக குருவை இகழ்வதும், அவமதிப்பதும், அவருக்கு இடர் புரி

வதும் பெரும் பாவமாகும். பாவங்களுக்கெல்லாம் தலையாய பாவமாகும் குருநிந்தை. குருநிந்தை செய்பவன் கொடிய நரகமடைவான்.

வடக்கே வேதிய குலத்தில் உதித்தவர் குமாரிலபட்டர் என்பவர். இவருக்குப் பட்டபாதர், பட்ட குமாரர் முதலிய பெயர்களுண்டு. இவர் ''பாட்டப் பிரதீபம்'' ''குமாரிலம்'' முதலிய நூல்கள் பல செய்தவர். இவர் கடவுள் கொள்கையை யுடன்படாத புத்தர்களை அடியுடன் விலக்கத் திருவுளங் கொண்டார். இவருடைய சீடர் ''மண்டனமிசிரர்'' என்ற மிகப் புகழ் பெற்றவர்.

ஒரு மதத்தைக் கண்டிக்க வேண்டுமாயின் அம்மத நூலை நன்கு பயிலுதல் வேண்டும். ஆனபடியால் இவர் புத்த மாணுக்கனைப் போல் வேடம் புனைந்து புத்த குருமார் நடத்தும் பள்ளியில் சேர்ந்து புத்த நூல்களைப் பயின்று வந்தார். ஒருநாள் அப்பள்ளியில் கடவுள் நிந்தையும் வேத நிந்தையும் மிகுதியாகப் பேசப்பட்டன. அப்போது குமாரிலபட்டர் கண்களில் நீர் பெருகியது.

இதனுல் ததாகதர் என்ற புத்த குரு இவன் வேதங்கற்ற வேதியன் எனவுணர்ந்து, ''அந்நியக் கொலை அகிம்சையே'' என்ற புத்த தருமத்தின்படி ஐந்தாவது மாடியில் இருந்து குமாரிலபட்டரைக் கீழே தள்ளி விட்டார். கீழே விழுகின்ற குமாரிலபட்டர் ''வேதம் உண்மையேல் நான் பிழைக்க'' என்ருர். அவர் கீழே விழுந்து இறவாமல் பிழைத்தார். ஆனுல் ஒரு கண் பழுதாயிற்று. ''உண்மையேல்'' என்று ஐயப்படக் கூறியதால் ஒரு கண் இழந்தார்.

பின்னர் அவர் அதினின்றும் வெளிப்போந்து வலிமையாகப் புத்தமத கண்டனங்களைப் புரிந்து வந்தார்.

அந்த நாட்டை அரசு புரிந்த சுதந்வன் என்ற மன்னவன் புத்தர்களுக்கு ஆதரவாக இருந்தான். அதனுல் எங்கும் புத்த மதம் பரவியிருந்தது.

குமாரிலபட்டர் அரசனையணுகி வேத நெறிகளை மிகச் சிறப்பாக விரிவுரை புரிந்தார். இவர் உரை குயிலின் குரல் போலவும், புத்தர்களின் உரை காக்கைகள் கத்துவது போலவும் இருந்தன. குமாரிலபட்டராகிய கருடன் முன் புத்தர்கள் குட்டிப் பாம்புகள் போல் அடங்கி ஒடுங்கினுர்கள்.

சுதந்வன் என்ற அரசன் புத்தர்களையும் குமாரிலபட்டரையும் பார்த்து, ''உங்கள் கல்விப் போரை விடுங்கள். மலையுச்சியேறிக் கீழே குதித்து வீழ்ந்து ஓர் இடரும் இன்றி எவர் வருகின்ருர்களோ அவர்கள் மதமே சிறந்தது என்று நான் நம்புவேன்'' என்ருன்.

இந்த வசனத்தைக் கேட்டுப் புத்தர்கள் நடுங்கினுர்கள். சிலர் மலையுச்சியேறி வீழ்ந்து மாண்டார்கள். பலர் மௌனமாய் ஒதுங்கினுர்கள். குமாரிலபட்டர் எல்லோரும் காணும்படி மலையுச்சியேறி வேதநாயகராகிய சிவபெருமானைத் தியானித்து, ''வேதமே பிரமாணம் என்பது உண்மையாயின் எனக்கு இடர் வராது'' என்று கூறிக் குதித்தார். ஒரு சிறிதும் இடர் இன்றிப் பிழைத்தார். இந்த அற்புதச் செயலைக் கண்ட மன்னன் மனம் மாறினுன். அவன் வைதிக மதத்தைத் தழுவினுன். புத்தர்களை வெறுத்து ஒறுத்தான்.

புத்தர்கள் அரசனிடம் வந்து மற்ருெரு பரீட்சை வைக்க வேண்டும் என்ருர்கள்.

அரசன் ஒருவருமறியாமல் கருநாகத்தைக் குடத்தில் அடைத்து மூடி, ''இதற்குள் இருப்பது இன்னது என்று கூறினுல் விடுவேன். இல்லையேல் கற்காணத்தில் இட்டு ஆட்டுவேன்'' என்ருன். ஒருநாள் தவணை கொடுத்தான். அன்றிரவெல்லாம் குளத்தில் இருந்து புத்தர்கள் ஜெபஞ் செய்து உணர்ந்து மறுநாள் காலை அரசவை வந்து, ''குடத்தில் இருப்பது கருநாகம்'' என்ருர்கள். குமாரிலபட்டர், நாகசயனராகிய நாராயணர் இருக்கின்ருர்'' என்ருர்.

புத்தர்கள் இவர் கூறுவது உண்மையாயின் இவரே குடத்துக்குள் கைவிட்டு எடுத்துக் காட்டுவாராக''; இதில் இவர் கூறும் விஷ்ணு இருந்தால் நாங்கள் தோல்வியுற்றவராவோம். தண்டனைக்கு உட்படுகின்ருேம்'' என்ருர்கள்.

பட்டபாதாசாரியர் குடத்தை வலமாக வந்து பணிந்து குடத்துக்குள் கையிட்டு அரவணைச் செல்வராம் திருமால் விக்கிரகத்தை எடுத்தார். அது பொன்னுருவாகப் பளபள என்று காட்சியளித்தது.

புத்தர்கள் கண்டு திகைத்து நின்ருர்கள். அரசன் வியந்தான். வேதமே யுண்மையென உறுதி கொண்டான். புத்த குருவையும் புத்தர்களையுங் கற்காணத்தில் இட்டு ஆட்டிக் கொன்று புத்த மதத்தை ஒழித்துத் தீர்த்தான்.

குமாரிலபட்டர் நாடு முழுவதும் வேத நெறிகளை விளக்கினுர். பலரைப் புலவர்களாக்கினுர். எங்கும் வேத முழக்கம் விளங்கியது. இவருக்கு முதுமைப் பருவம் எய்தியது. இளமையில் புத்தமதத்தைக் கற்பித்த தன் குருநாதனைக் கற்காணத்தில் இட்டு ஆட்டிக் கொல்லத் தான் காரணமாக இருந்ததை நினைத்தார். குருநிந்தைக்குக் கழுவாய் எது என்று ஆராய்ந்தார். சிறிது சிறிதாக உடம்பு சுடப்பட வேண்டும். இதுவே குருநிந்தைக்குப் பிராயச்சித்தம் என்று தீர்மானித்தார்.

ஒரு இடத்தில் நின்று தன் மாணவர்களைத் தன்னைச் சுற்றி உயரமாக உமியைக் குவிக்குமாறு செய்தார். உமியில் தீ வைக்கச் சொன்னார். அது கருகிக் கருகி உடம்பைச் சுட்டு வந்தது. இது "துஷாக்கினி" எனப்படும்.

இப்படி துஷாக்கினியில் நின்று சிவத் தியானத்தில் இருந்தார் குமாரிலபட்டர். அங்கு பகவத்பாதர்—சங்கரர் சென்று அவருடைய குருநிந்தையின் பொருட்டு தானே தண்டனையை யேற்குங் குரு பக்தியைக் கண்டு வியந்தார். அவருக்கு அருள் புரிந்தார். குமாரில பட்டர் சிவயோக நெறியில் சிவபதம் பெற்றார். இதனால் குருநிந்தை எத்துணை கொடிது என்பது நன்கு விளங்குகின்றதல்லவா ?

குருநிந்தை புரிந்தோன் தூஷாக்கினியில் இறங்க வேண்டும். இல்லையேல் நரகில் பலகாலம் துன்புறுவான். ஆதலால் குருநிந்தை கொடிது. எனவே எல்லோரும் குருவைத் தெய்வமாக மதித்துத் துதித்து உய்வு பெறுவார்களாக.

குறிப்பு :—

திரிபுரவாசிகளின் உறுதி குலையுமாறு திருமால் புத்தாவதார மெடுத்து நாரதர் சீடராக வர முப்புரத்தில் தெய்வம் இலது என்று பிரசாரம் புரிந்தார். அந்த மதத்தில் சார்ந்து கௌதம புத்தரும் எங்கும் புத்தமதத்தைப் பரப்பினர். இம்மதத்தின் அவலத்தை யகற்ற தென்னகத்தில் அவதரித்தவர் மணிவாசகர்.

"வஞ்சனையால்
மாயனிடும் புத்தஇருள் இரிந்தோட வந்தொருவர்
சேய இளம் பரிதியெனச் சிவனருளால் அவதரித்தார்"

என்று திருவிளையாடற் புராணஞ் செப்புகின்றது.

எனவே தெற்கே மாணிக்கவாசகரும் வடக்கே குமாரிலபட்டரும் புத்தமத இருளையகற்றினர்கள்.

புத்தர் தோன்றிய இந்தியாவில் இன்று புத்த மதம் இல்லை. கடல் கடந்து இலங்கையிலும் சைனாவிலும் பர்மாவிலும் இருக்கின்றது. இதற்குக் காரணம் மணிவாசகருடைய அருட்டிறமும் குமாரிலபட்டருடைய பெருந்திறனுமாகும்.

## சாந்தி பருவம்

### மோக்ஷ தர்மம்

(144-ஆம் பக்கத் தொடர்ச்சி)

இலட்சுவாகு "ஐயா! நான் அரசன்; நீர்* ஆறு கருமங்களிலும் உறுதியாக இருக்கும் பிராம்மணர். உமக்குச் சிறிது பொருளைத் தருகின்றேன். எது வேண்டுமோ அதைக் கேளும்" என்றான்,

பிராம்மணன் "அரசனே! பிராமணன் ப்ரவ்ருத்தியுள்ளவனென்றும், நிவ்ருத்தியுள்ளவனென்றும் இரண்டுவிதமாவான், அவனுடைய தருமமும் இருவிதங்களாகும். நான் வாங்குவதிலிருந்து ஒழிவு பெற்றவன். எவர்கள் ஏற்குந்தன்மையுடையவர்களாக இருக்கின்றார்களோ அவர்களுக்கு நீ தானங்களைக் கொடு. நான் தானம் ஏற்பவனல்லன். உனக்கு வேண்டுவது என்ன! எதை நான் உனக்குக் கொடுக்க வேண்டும்?" என்று கேட்டான்.

அரசன் "வேதியரே! நான் வேந்தன். எங்கும் எப்போதும் கொடு என்ற சொல்லை நான் சொன்னதேயில்லை. ஆனால் யுத்தத்தைக் கொடு என்று சொல்லுவேன்" என்றான்.

அந்தணன் "அரசனே! நாங்கள் சுவதர்மத்தில் நிலைத்து மகிழ்ச்சியுறுவதுபோல் நீயும் உமக்குள்ள சுவதர்மத்தில் மகிழ்ச்சியடைகின்றாய். உமது விருப்பம்போல் செய்" என்றான்.

இட்சுவாகு "அந்தணரே! நீர் சக்திக்குத் தக்கவாறு தருகின்றேன் என்றீர். இந்த ஜபத்திற்குள்ள பயனை எனக்குக் கொடுக்க வேண்டும்" என்றான்.

அந்தணன் "அரசனே! யுத்தத்தைக் கொடு என்று மட்டும் என் வாக்கு சொல்லும் என்று புகழ்ந்து 'பேசினாயே. என்னிடம் யுத்தம் கிடையாது; திரும்பவும் எதற்காக யாசிக்கின்றாய்?" என்றான்.

அரசன், "பிராம்மணர்களுக்கு வாக்கு வஜ்ராயுதம்; அரசர்களுக்குக் கை வஜ்ராயுதம். கையால் வாழ்கின்றவர்கள். உம்முடன் எனக்கு வாக்கு யுத்தம் வேண்டும்" என்றான்.

அந்தணன், "அரசே! என் ஆற்றலுக்கு ஏற்றபடி அளிப்பேன். கேள்" என்றான்.

---

* ஆறுகருமங்கள்: அத்யயனம், அத்யாபனம், யஜனம், யாஜனம், தானம், பிரதிக்ரஹம்.

அரசன், "அந்தணரே! நூறு யாண்டுகள் செய்த ஜபத்தின் பயனை எனக்குக் கொடும்" என்றான்.

அந்தணன் "அதுபடியே தந்தேன். பெற்றுக் கொள்" என்றான்.

அரசன், "என்னால் யாசிக்கப்பட்ட ஜபத்தின் பயன் வேண்டாம். உமக்கு நன்மையுண்டாகட்டும். நான் போகின்றேன் ஜபத்திற்குரிய பயன் என்ன என்பதைச் சொல்லும்" என்றான்.

அந்தணன், அரசே! என்னால் ஜபிக்கப்பட்டதும் உனக்கு அளிக்கப்பட்டதுமான ஜபத்தின் பயன் என்ன கிடைக்கும் என்பதை நான் அறியேன். இந்தத் தருமமும் * யமனும் காலனும் மிருத்யுவும் இதற்கு சாட்சிகள்" என்றான்.

அரசன், "அறியப்படாத இந்தத் தருமத்தின் பயனானது எனக்கு என்ன செய்யப் போகின்றது? அதன் பயனை நீர் சொல்லவில்லை யானால் அதை நீரே அடையும். சந்தேகத்துடன் கூடிய அதை நான் விரும்புகின்றவனல்லன்" என்றான்.

அந்தணன், "அரசனே! பாகப் பிரிவினையும், கன்னிகையைத் தருவதும், கொடுக்கின்றேன் என்பதும் ஒரு முறைதான். ஜபம் செய்யும்போது பயனைப்பற்றி நான் நினைக்கவேயில்லை. ஆதலால் ஜபத்தின் பயனை நான் எவ்விதம் அறிவேன். கொடு என்று நீ கேட்டாய். நான் கொடுத்து விட்டேன் என்று கூறி விட்டேன். என் வாக்கு பொய்யாகக்கூடாது. நீ இங்கு வந்து யாசித்தனை. உனக்கும் பொய்மையால் வரும் தீமை வரக்கூடாது. பொய் பேசுகின்றவனுக்கு இம்மை மறுமை இரண்டும் இல்லை. பொய் பேசுகின்றவன் முன்னோர்களைத் துன்பத்தினின்றும் மீள்விக்க மாட்டான். யாகம் வேதம் ஓதுதல் தானம் நியமம் ஆகிய அனைத்திலும் உண்மையே மேலானது. ஆயிரம் ஆண்டு செய்த தவமும் உண்மையைவிட உயர்ந்ததாகாது. சத்தியமே கடவுள், சத்தியமே தவம். சத்தியமே பெரிய யாகம். சத்தியமே சாஸ்திரம். சத்தியமே வேதத்தில் விளங்கிக் கொண்டிருக்கின்றது. உலகமே சத்தியத்தில் நிலை பெறுகின்றது. சத்தியத்தால் காற்று வீசுகின்றது. சத்தியத்தால் கதிரவன் ஒளி செய்கின்றான். சத்தியத்தால் நெருப்பு எரிகின்றது. சத்தியத்தால் சுவர்க்கம் நிலைபெற்றிருக்கின்றது. எல்லாவற்றிலும் சத்தியம் மேலானது. பொய்யைச் செய்யாதே. அங்கீகரித்தபின் கொடுக்க விருப்பமில்லாதவனும், யாசித்த பின் பெற்றுக்கொள்ள விருப்பமில்லாதவனும் ஆகிய இருவர்களும் பொய்யர்கள் ஆவார்கள்.

---

* யமன்—எல்லாவற்றையும் அடக்குகின்ற அதிகாரி.
காலன்—யமனுடைய அமைச்சன்.
மிருத்யு—காலனுடைய பணியாளன்.

ஆகவே நீ பொய்யனுகாதே. ஜபத்தின் பயனைப் பெற்றுக் கொள்" என்றான்.

இட்சுவாகு, "அந்தணரே! போர் புரிவதும் காப்பாற்றுவதுந் தான் அரசனுக்குரிய அறம். அரசன் தானந்தருபவன். உம்மிடமிருந்து தானம் எப்படி பெற்றுக் கொள்ளுவேன்?" என்றான்.

அந்தணன் "அரசனே! நான் உன் வீட்டிற்கு வந்தவனுமல்லன்; உன்னைப் பெற்றுக்கொள்ளென்று வேண்டினவனுமல்லன். நீயே என்னிருப்பிடம் வந்து 'யாசித்தபின்' பெற்றுக் கொள்ள மாட்டேன் என்பது முறையாகுமா?" என்றான்.

தருமம், "நீங்களிருவரும் சமாதானமாகப் போங்கள். நான் தருமம் என்று அறிந்து கொள்ளுங்கள். பிராம்மணன் தானஞ் செய்த பயனையடையட்டும்: அரசன் சத்தியத்திற்கு உரிய பயனை யடையட்டும்" என்று சொல்லிற்று.

சுவர்க்கம், "நான் சுவர்க்கம்: உங்கள் முன்னே தோன்றி யுள்ளேன். உங்களுக்குள்ளே வாக்குவாதம் வேண்டாம். சமான மான பயனையடையுங்கள்" என்று சொல்லிற்று.

இட்சுவாகு, "சுவர்க்கமே! இந்த அந்தணர் தானஞ் செய்ய விரும்புவாராயின், என்னால் செய்யப்பட்ட கர்மங்களின் பயனைப் பெற்றுக் கொள்ளட்டும். இல்லையேல் சுவர்க்கமே நீ திரும்பிப் போ" என்றான்.

அந்தணன், "நான் அறியாமையால் இளமையில் கைநீட்டி யிருக்கக்கூடும். இப்பொழுது காயத்திரி ஜெபஞ் செய்துகொண்டு நிவ்ருத்தியையடைந்துளேன். நான் ஒரு போதும் பிறரிடத்தில் ஒன்றைப் பெறமாட்டேன். நெடுங்காலமாக வேண்டாமையை யடைந்திருக்கின்ற நான் உன்பால் ஒன்றையும் விரும்ப மாட்டேன்" என்றான்.

இவ்வாறு ஜெப வேதியருக்கும் இட்சுவாகுக்கும் வாக்குவாதம் நடந்து கொண்டிருக்கும்போது, விகார உருவமும் கிழிந்த ஆடை யுமுடைய * இருவர் அங்கே வந்தார்கள். ஒருவன், "நான் உனக்குத் தரவேண்டும்" என்றும் "நீ எனக்குத் தரவேண்டியதில்லை" என்று மற்றொருவனும் வாதிட்டுக் கொண்டார்கள்.

அப்போது அந்தணன், "அரசனே! நீ என் ஜெபத்தின் பயனைப் பெற்றுக் கொள்ளவில்லையானால் சபிப்பேன்" என்றான். அரசன் கையை நீட்டிப் பெற்றுக் கொண்டான். என் பயனையும் நீர் பெற்று

---

* காமமும் குரோதமும்.

இருவரும் சேர்ந்து அனுபவிப்போம்'' என்றான். அந்த இருவரும் ''நாங்கள் காமக் குரோதங்கள்'' என்றார்கள்.

அப்போது பிரமதேவர் முதலிய சகலதேவர்களும் தோன்றினார்கள். இருவருக்கும் இப்படி ஒரு சோதனை நடந்தது. ஆயிரந் தலையுடைய நாராயணர் காட்சியளித்தார். பிராமணனும் இட்சுவாகுவும் யோக நிலையில் அமர்ந்தார்கள். அவர்களுடைய தலையிலிருந்து ஒளிகள் வெளிப்பட்டு அழியாத பரகதியை யடைந்தன. ஜெபத்தின் பயனை அந்தணன் அடைந்து அழிவற்ற பரவஸ்துவுடன் கலந்தான்'' என்று பீஷ்மர் கூறினார்.

தருமர், ''பிதாமகரே! ஞானயோகத்தையும், அக்னிகோத்திரத்தின் பயனையும் கூறவேண்டும்'' என்று கேட்டார்.

பீஷ்மர் ''இதுபற்றி முன்னொரு சமயம் வியாழ பகவானுக்கு மனு உபதேசித்த சிறந்த நுட்பமான பொருளைக் கூறுகின்றேன்; கேள்.

மனு ''தேவ குருவே! ஒருவனுக்கு சுகம் துக்கம் என்பவை மனத்தினாலேயே உண்டாகின்றன. எவனுக்கு எது எது பிரியமுள்ளதோ அவனுக்கு அது அது சுகமாகின்றது. எவனுக்கு எது எது பிரியமில்லையோ அவனுக்கு அது அது துக்கமாகின்றது. விருப்பமுள்ள பொருள்களையடைய கன்மங்கள் செய்யப்படுகின்றன. வேதங்களில் கூறிய கர்ம வழிகள் ஆசையுள்ளவனைப் பற்றியிருக்கின்றன. ஆசையிலிருந்து விடுபட்டவன் பரம்பொருளை அடைகின்றான்.

வேண்டியதும் வேண்டாததும் முறையே சுகமும் துக்கமுமாயிருக்கின்றன. சரீரத்தால் செய்த கர்மத்தை சரீரத்தால் அனுபவிக்க வேண்டும். வாக்கினால் செய்த கர்மத்தை வாக்காலேயே அனுபவிக்க வேண்டும்; மனத்தால் செய்த கர்மத்தை மனத்தாலேயே அனுபவிக்க வேண்டும். மீன் எப்படி தண்ணீரின் போக்கிலேயே போகுமோ அதுபோல் ஆன்மா தான் செய்த கன்மத்தை அனுசரித்தே செல்லுகின்றது. கன்மத்திலிருந்து ஒழிவடைந்தவன் பரமாத்மாவை யடைகின்றான். பரம் பொருளானது ஆணுமன்று; பெண்ணுமன்று; அலியுமன்று. சத்துமன்று; அசத்துமன்று; சதசத்துமன்று. அது அழிவற்றது. சூடுள்ளதுமன்று; குளிருள்ளதுமன்று; மிருதுவுமன்று; கடினமுமன்று. உருவன்று; அருவன்று; இனிப்புமன்று; கசப்புமன்று; துவர்ப்புமன்று.

இந்த உடம்பு பரிசத்தையும், நாவானது இரசத்தையும், மூக்கு மணத்தையும், செவி ஓசையையும், கண் வடிவத்தையும் அறிகின்றன. ஆனால் பரம்பொருளை ஞான யோகத்தாலேயே அறிய வேண்

டும். பிறவற்ருல் அறிய ஒண்ணுது. ஐம்பொறிகளையும், ஐம்புலன் களையும் அடக்கிய ஞானிகள் தங்கள் ஞானக்கண்ணுல் பரம்பொருளை பார்க்கின்ருர்கள். பரம்பொருள் உயிர்க்குயிராய் இந்த உடம்பில் உறைகின்றது. கட்டையில் புகையும் நெருப்பும் இருக்கின்றன. கட்டையைக் கோடாலியால் வெட்டினுல் புகையையும் நெருப்பை யும் காண முடியுமா? கட்டையைக் கடைந்தால் காணமுடியும். அதுபோல் இந்த உடம்பை அறுத்தால் பரமாத்மாவைக் காணமுடி யாது. ஞான யோகஞ் செய்து அந்த அநுபவத்தாலேயே பரமாத் மாவைத் தெரிசிக்க வேண்டும்.

பரம்பொருளையடையும் நெறி தெரியாதவன் பிறப்பிறப்பென் னும் சக்கரத்தில் அகப்படுகின்ருன். ஆன்மா மனம் புத்தி முதலிய கருவிகளுடன் வேறு பிறப்பையடைகின்றது. அமாவாசையன்று சந்திரன் இருக்கின்ருன். ஆனுல் கண்களுக்குத் தெரிவதில்லை. அது போல் ஆன்மாவும் கண்களுக்குத் தெரிவதில்லை. தெளிந்த நீரில் சந்திர சூரியர்களைப் பார்க்கலாம். அதுபோல காமக் குரோத அழுக் குகள் இல்லாத உள்ளத்தில் இறைவனைக் காணலாம். நன்மை, தீமை, விருப்பு வெறுப்பு முதலிய நீங்கிய ஆன்மா பரமான்மாவில் ஒடுங்குகின்றது.

மண் நீரிலும், நீர் நெருப்பிலும், நெருப்பு காற்றிலும், காற்று விண்ணிலும், விண் மனத்திலும், மனம் புத்தியிலும், புத்தி ஆன்மா விலும், ஆன்மா பரமான்மாவிலும் ஒடுங்குகின்றன என்று அறிந்து கொள்'' என்ருர்.

(தொடரும்)

## சந்தா நேயர்களுக்கு

திருப்புகழமிர்த இதழ்கள் ஒவ்வொரு ஆங்கில மாதமும் 16ந் தேதி (அன்று விடுமுறையானால் அடுத்துவரும் விடுமுறையில்லாத நாளில்) தபாலில் சேர்க்கப்படும். ஆகவே சந்தாத் தொகைகள் எந்தத் தேதியில் கிடைத்தாலும் அடுத்துவரும் 16ந் தேதி யளவில்தான் திருப்புகழமிர்த இதழ்கள் அனுப்பி வைக்கப்படும்.

பத்திரிகை எந்த மாதமாவது கிடைக்காவிட்டால் அந்த (ஆங்கில) மாதம் 25ந் தேதிவரை பொறுத்துப் பார்த்துவிட்டு அதற்குமேல் எமக்கு எழுதவேண்டும். அதற்கு முன் எழுதப்படும் கடிதங்கள் கவனிக்கப்பட மாட்டா. ஒரு மாதத்துக்கு மேற்பட்டுத் தெரிவிப்போர் கிரயம் செலுத்திப் பெறவேண்டும்.

பிரதிகள் மாதாமாதம் ஒழுங்காகக் கிடைக்கப்பெருத அன்பர்கள் அந்தந்த வட்ட தபால் மேற்பார்வையாளர்களுக்குப் புகார் எழுதியனுப்பி ஒழுங்கு செய்து கொள்ள வேண்டும். இவ்விடம் தபாலில் சேர்ப்பது வரைதான் எமது பொறுப்பு. தபாலில் தவறும் பிரதிகளுக்கு நாம் பொறுப்பேற்க இயலாது.

பதிலை எதிர்பார்ப்போர் பதிலுக்கு உண்டான கார்டு அல்லது கவர், ஸ்டாம்பு இவைகளையும் சேர்த்தனுப்ப வேண்டும்.

மானேஜர், திருப்புகழமிர்தம்.

### திருப்புகழமிர்தம் ஆண்டுச் சந்தா

| | |
|---|---|
| இந்தியா, இலங்கை | ரூ. 3—50 |
| மற்ற நாடுகள் | ரூ. 5—50 |

---